# இயலிசை

தனி பிரதி விலை 50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ. 10/-
அரையாண்டு சந்தா ரூ. 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
K. P. இளங்கோவன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

மலர் 2 | 15-7-83 இசைக்கலை உலக தமிழ் மாதமிருமுறை | இதழ் 5/6


## புதிய அரசவைக் கலைஞர் நாதசுரம் ஷேக் சின்ன மவுலானா தமிழக முதல்வர் திடீர் அறிவிப்பு !



திருவாரூர் கடந்த 6.6.83 அன்றுதிருவாரூர் கோவில் அறங்காவலர் திருவாரூர் தென்கோவன் மகள் செல்வி மணிமேகலைக்கும், செல்வன் கார்த்திகேயனுக்கும் நடைபெற்ற திருமணத்திற்கு தமிழக முதல்வர் எம். ஜி. ஆர், வருகைதந்து திருமணத்தை நடத்தி வைத்தார், திருமணத்திற்கு ஷேக் மெஹபூப் சுபான், திருமதி காலி சாபி பேகம் தம்பதியார் நாதசுரம் வாசித்தனர். அவர்களை முதல்வருக்கு அறிமுகம் செய்து அவர்களை நாதசுர மேதை ஷேக் சின்ன மவுலானாவின் சீடர்கள் என முதல்வருக்கு தெரிவித்தனர்.

மணமக்களை வாழ்த்தி முதல்வர் பேசும் பொழுது நாதசுர தம்பதிகளை வாழ்த்தி அவர்களது குருநாதர் ஷேக் சின்னமவுலானா அவர்களை வரும் அண்ணாபிறந்த நாள் 15.9.83 அன்று தமிழக அரசவைக் கலைஞராக நியமிக்க உள்ளேன் என திருமண கூடத்திலேயே அறிவித்தார். திருமணத்திற்கு வந்திருந்தவர்கள் கை தட்டி முதல்வரை வாழ்த்தினர்.

தமிழக அரசில் தற்பொழுது நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன், மதுரை M. P. N. சகோதரர்கள், திருப்பாம்புரம் T. K. S. சகோதரர்கள் நாதசுர அரசவைக் கலைஞர்களாக உள்ளனர்.



விழாவில் கலந்துகொண்ட திருமதி & திரு பித்துகுளிமுருகதாஸ் லால்குடி ஜெயராமன் இவர்களுடன் திரு & திருமதி ஜெயமாதங்கி விசுவநாதன் (பாடகர்)

## திருவொற்றியூர் பட்டினத்தார் விழா திருக்குறளார் வருகை !

பட்டினத்தார் திருநட்சத்திர 26வது ஆண்டு விழாவினை சென்னை திருவொற்றியூரில் பட்டினத்தார் ஆலயத்தில் வரும் 24-7-83 அன்று ஒம்கங்கை விநாயகர் அருள் நெறித் திருக்கூட்டம் நடத்த உள்ளனர்.

விழாவன்று காலை திருவொற்றியூர் தியாகேசப் பெருமான் ஆலயத்திலிருந்து தருமபுரம் சுவாமிநாதன் குழுவினர் திருவீதி தேவார பாராயணம் செய்து வருவார். காலை 9மணிக்கு திருக்கூட்ட செயலாளர் N. K தருமலிங்கம் வரவேற்புரை நிகழ்த்துவார்.

பின்னர் பண்டித நடேசனார், தொண்டை மண்டல ஆதினம், திருக்குறளார் V. முனுசாமி, MN சங்கரநாராயணன் மலைவையாயூர் சித்தாபதி ஆகியோர் விரிவுரையாற்றுவார்கள்.

பகல் P, G கதிர்வேல் நாதசுர இன்னிசையும் கன்னியப்பசுவாமி தவத்திரு சொ. ரா. தேமொழியார். திருமதி ஜெயக்குமாரி பாஸ்கரன் இவர்கள் சொற்பொழிவும், திருமதி கௌரி ராசகோபால் குழுவின் 'அருணகிரி நாதர்' இசைச் சொற்பொழிவும் நடைபெற உள்ளது.

மாலை சீர்காழியாரின் மகனார் டாக்டர் G. சிவசிதம்பரம் குழுவினர் இன்னிசை வழங்குவர்.



நாதோபாசனா 16-7-83 மாலை 6.30 மணிக்கு சிக்கல் குஞ்சுமணி நீலா குழுவினர் புல்லாங்குழல் கச்சேரி மயிலை சீனிவாச சாஸ்திரி கூடத்தில் நடைபெறும்,

ஸ்ரீ தியாகராஜ வித்வத் சமாஜம் மயிலை, சென்னை-4. 30-7-83 மாலை 6-30மணிக்கு ஸ்ரீமதிநளினி ராம் பிரசாத் குழுவினர் இன்னிசை.

## திருப்புகழ் தேனிசை இசைச்சுட்டி வெளியீடு !

திருமதி ஜெயமாதங்கி விசுவநாதன் பாடிய திருப்புகழ் தேனிசை (ஆறு படை வீடு) இசைச்சுட்டி (Media cassettc) வெளியீட்டு விழா அருணகிரிநாதர் திருநட்சத்திர நாளான ஆனி மூலம் 25-6-83 அன்று சென்னை வடபழநியாண்டவர் ஆலயத்தில் சிறப்பாக நடைபெற்றது. சாது பித்துகுளி முருகதாஸ் தனது துணைவியாருடன் வந்து சிறப்புரையாற்றி முதல் இசைச்சுட்டியினை வெளியிட்டார், வயலின் மேதை பத்ம ஸ்ரீ லால்குடி ஜெயராமன் அதனைப்பெற்று ஆசியுரை வழங்கினர் விழாவில்இசை இயக்குநர் ஸ்ரீகுமார், புரசை E அருணகிரி, சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம் மற்றும் பல இசைவாணர்கள், திருப்புகழன்பர்கள் கலந்து கொண்டனர்.

இசைச்சுட்டியில் விநாயகர் துதியும், ஆறுபடை வீடுகளில் படைவீட்டுக்கு ஒன்றாக ஆறு பாடல்களும் மதுரை, ரத்னகிரி, ஆறுதிருப்பதி பாடல்களும் வெவ்வேறு இனிய ராகங்களில் பாடப் பட்டுள்ளன.

இயலிசை

15-7-83

ச.கலைத் தொடர் கதை

# சதுரச் சிங்காரம்

## 7. பரம ரசிகன் !

முன்னூறு வருடங்கள் வெள்ளையன் இந்தியாவை ஆண்டான் என்றால் பல காரணங்கள் உண்டு அவன் நீதி பரிபாலனம் சரிவர செய்ததும் அதில் ஒன்றாகும். பயங்கர அரசியல் கைதியாக இருந்தாலும் விசாரணை என்று ஏதோ நடத்தித்தான் தண்டனை வழங்குவான். குற்றங்கள் செய்தவர் எவராக இருந்தாலும் தண்டனைக்கு தப்ப முடியாது. இன்று போல் பண பலத்தால், அரசியல் செல்வாக்கால் தண்டனைக்கு தப்பிவிட முடியாது. எவ்வளவு செல்வாக்கு புகழ் உள்ளவராக இருந்தாலும் சட்டத்திற்கு எதிரே சமம்தான். அன்று புகழ் மிக்க நடிகர்களும் லட்சுமி காந்தன் கொலை வழக்கில் சிறை தண்டனை அடைந்தது அனைவருக்கும் தெரிந்ததே. அதே நேரத்தில் தக்க சாட்சியம் இல்லாமல் குற்றம் நிரூபிக்கப்படாமல் தண்டனை வழங்குவதனையும் வெள்ளையன் விரும்பவில்லை இந்த தர்மத்தின் அடிப்படையில்தான் குத்தாலம் கணபதி பிள்ளை வழக்கும் நடைபெற்றது.

ஜமீனில் பலர் நட்டுவனார் மீது சந்தேகப்பட்டாலும் பலரும் வழக்கு மன்றம் வந்து சாட்சி சொல்ல முன்வரவில்லை. மாறாக அவரை வண்டி ஏற்றிவிட்ட சாட்சியத்தை மட்டும் சரியாக கூறினர். ஜமீன் கொலையை நேரில் பார்த்த மாணவியோ தன்னை ஜமீன் தனியே அழைத்து வரவில்லை என்று சொன்னாள். ஏனெனில் இது அவளுக்கு கற்பு பிரச்சனை அல்லவா ஜமீன் தனி இடத்திற்கு அனுப்பிவைத்த ஆட்களோ தங்களுக்கு ஒன்றும் தெரியாது என்று சொல்லிவிட்டனர். ஏனெனில் இது அவர்கள் ஜமீன் கௌரவ பிரச்சனை. இசைக் குழுவினர் தலைவரைக் காட்டி கொடுப்பார்களா? ஆக போதிய சாட்சியம் இல்லாததால் நட்டுவனார் குற்றம் சந்தேகத்திற்கு இடம் Benefit of Doubt என்று நீதிமன்றத்தால் விடுதலை செய்யப்பட்டார். என்றாலும் அனைவருக்கும் இது தெரிந்த ரகசியமாக இருந்தது. அதன்பின் மற்ற ஜமீன்களும், மைனர்களும், துரைகளும், பெரிய மனிதர்களும் என்னதான் ஆடவந்த பெண்ணுக தாசி குலமாக இருந்தாலும் பக்குவமாகப் பழக ஆரம்பித்தனர்.

சிம்மநந்தன அரங்கேற்றமும், அரச விருந்தும் முடிந்து மாளிகை வெளிவந்த பஞ்சாட்சர பாகவதருக்கும், சுப்புணிக்கும் வெளியே நின்ற கூட்டத்தினைரக் கடந்து செல்லவே சிரமமாகி விட்டது. அதற்குள் மாளிகை உள்ளே நடந்தவைகள் வெளியே உள்ள மக்களுக்கு தெரிந்து அபிராமி ஆடி உருவான சிம்மத்தைப் பார்க்க மாளிகைக்குள் வர முயற்சி செய்து கொண்டிருந்தனர். அவர்களைத் தடுத்து உள்ளே இருப்பவர்களை வெளியே அனுப்புவதே காவலர்களுக்கு பெரும்பாடாக இருந்தது. உள்ளேயிருந்து வருபவர்களை ஆதங்கத்தோடு வெளியில் நிற்பவர்கள் பார்த்தனர்.

சுப்புணிக்கு தான் ராசா மாளிகைக்கு சென்றது அங்கு கண்டது உண்டது அனைத்தையும் பத்து பேரிடமாவது சொன்னால்தான் அரசவிருந்து ஜீரணமாகும். அவனது ஆவலை பூர்த்தி செய்யும் வண்ணம் அவன் சற்றும் எதிர்பாராத ஒருவன் கூட்டத்தில் நின்று கொண்டிருந்தான் அவன்தான் குளத்து மணி !

பாகவதர் பக்கத்தில் இருப்பதனையும் மறந்தவனாய் சுப்புணி குளத்துவைப் பார்த்து யோவ்... குளத்து எல்லாம் முடிஞ்சு போச்சு, இனி என்னங்காணும் பார்க்கப் போற என்று கிண்டலாய்க் கேட்டான்.

குளத்து பாகவதரையும் சுப்புணியையும் பார்த்ததும் அனைத்தையும் புரிந்து கொண்டு அரசவிருந்து பலமாக்கும் என்று தனது ஆதங்கத்தை வெளியிட்டான்.

''விருந்தைவிட பெரிசா, ராச தரிசனமும், அபிராமி சிம்ம நந்தன ஆடல் அரங்கேற்றமும் பார்த்து வந்தேன் தெரியுமா?'' என்றான் சுப்புணி, 'உம் நானும் பாகவதர் கூட ஒட்டிக்கிட்டிருந்தா எல்லாம் பார்த்திருப்பேன் என்று இழுத்தான் குளத்து மணி.

தன்னைப்பற்றி குறிப்பிட்டவுடன், பாகவதர் குறுக்கிட்டு சுப்புணியிடம் 'குருக்கள் எந்த ஊரு' என்று கேட்டார்,

சுப்புணி பாகவதரிடம், இவர் நம்ம உச்சிபிள்ளையார் கோவில் குருக்கள்தான், குளத்து மணி என்று பெயர். குத்தாலம் பாப்பா சதுரன்னு இவருக்கு மிகவும் பிடிக்கும். தவறுதலா இங்கே வந்துவிட்டார் என்று அறிமுக உரையிலேயே குத்தி வைத்தான். குளத்து அபிராமியைப் பற்றி குறைத்து பேசினதற்கு பழிவாங்க சுப்புணிக்கு கிடைத்த சமயத்தை அவன் விடவில்லை,

'ஊம், என்ன அபிராமி, ஜனங்க பார்க்க வந்தா வந்து விசாரிக்க வேண்டியது தானே ராசா மாளிகையில் புகுந்து கொண்டு கதவை மூடிக்கிறு? காவல் வேறு' என்று தன்னால் பார்க்க முடியாத ஆத்திரத்தைக் கொட்டி தீர்த்து சுப்புணிக்கு பதில் சொன்னான் குளத்து, சுப்புணிக்கு சிரிப்பு தாங்க முடியவில்லை. அதற்குள், பாகவதர், குருக்களய்யா கவலைப்படாதிங்க மாளிகை மாடியிலே பாருங்க என்றார்.

வெளியே கூட்டம் சேர்ந்துள்ளது என்று அறிந்த அபிராமி இளையராசாவுடன் மாளிகை மாடிக்கு வந்து நின்றாள், மக்கள் அதோ அபிராமி, அதோ ராசா என்று கரகோஷம் செய்ய பதிலுக்கு இருவரும் அனைவருக்கும் வணக்கம் செலுத்தினர். அபிராமி தரிசனமும், அரச தரிசனமும் கிடைத்த மக்கள் மகிழ்ச்சியில் மூழ்கினர் குளத்து அபிராமியை அதிசயமாகப் பார்த்த அதே விநாடியில் அவனது பரம ரசிகனானான்.

இளையராசாவுக்கு தன் வாழ்நாளில் இப்படியொரு வரவேற்பு எங்கும் கிடைத்ததைப் பார்த்ததில்லை இன்று அபிராமியுடன் இணைந்து இருக்கும் இந்தநிலையில் மக்கள் நடுவில் தனது செல்வாக்கு மேலும் புகழுடன் வளர்வதை எண்ணி மகிழ்ந்தார். அலங்கார பிரியை ஆடம்பர பிரியை புகழ் போதைகொண்ட பேதை கர்வத்துடன் இளையராசாவை பார்க்க இருவர் முகத்திலும் புன்னகை அரும்பியது. அதன் அர்த்தங்களைத் தெரிந்து கொள்ள இருவரும் தனிமையை விரும்பினர்.

(தொடரும்)

## நாதசுரக் கலைஞர் P. K. மதுரைக்கு பாராட்டு விழா

சென்னை தேனாம்பேட்டை நாதசுரச் கலைஞர் P. K. மதுரைக்கு அவரது மாணவர்கள் சார்பில் தவில் கலைஞர் V. N. வேலாயுதம் வரும் 18-7-83 அன்று சென்னை ஆழ்வார்ப்பேட்டை வீனஸ் காலனியில் பாராட்டு விழா ஏற்பாடு செய்துள்ளார், விழாவிற்கு தமிழ் நாடு இயல் இசை நாடக மன்ற செயலாளர் D. V. நாராயண சாமி தலைமை வகிக்க டாக்டர் S சோமசுந்தரம் கலைஞருக்கு பொன்னாடை போர்த்த இசைச் சித்தர் சிதம்பரம் S ஜெயராமன் பண முடிப்பு வழங்குகின்றார். T K. கோவிந்தராவ், திருக்குறள் முனுசாமி, மற்றும் பலரும் வாழ்த்துரை வழங்க உள்ளனர்.

## கேரளத்தில் இசை நாட்டியம் வளர்த்த தமிழர்கள் !

### வீணை S. பாலசந்தர் தகவல்



சமீபத்தில் திருவனந்தபுரத்திற்கு வீணை கச்சேரி செய்வதற்கு சென்றிருந்த S பாலசந்தர் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறியதாவது.

திருவனந்தபுரம் சுவாதி திருநாள் மகாராஜா இயற்றிய பாடல்கள் என்று பரவி இருக்கும் பல பாடல்கள் அவர் இயற்றவில்லை.

அவைகளை உண்மையில் இயற்றியது மகாராஜா தர்பாரில் முக்கிய பதவி வகித்த பெரும் நாட்டிய மேதையான இசைக் கலைஞர் வடிவேலு.

இந்த விபரத்தை உறுதிப்படுத்த ஆதாரமாக பல ஓலைச் சுவடிகள் வடிவேலுவின் வம்சத்தைச் சேர்ந்த வீணை வித்துவான் தஞ்சாவூர் K P சிவானந்தத்திடம் இப்பொழுது இருக்கிறது. அந்த ஓலைச் சுவடிகளை கண்ணால் பார்த்து ஆராய்ந்த பிறகு இதைக் கூறுகிறேன்.

''தஞ்சை நால்வர்,'' என்று புகழப்பட்ட பொன்னையா, சகோதரர்களான பொன்னையா' சின்னையா, சிவானந்தம், வடிவேலு இவர்கள் முத்துசாமி திட்சதரின் சீடர்கள் ஆவார்கள்.

தஞ்சை சரபோஜி மகாராஜாவின் ஆதரவில் இருந்த இந்த இசை மேதைகள், ஏதோ மன வருத்தம் காரணமாக தஞ்சையைவிட்டு செல்ல நேரிட்டது அச்சமயம் திருவனந்தபுரம் மகாராஜாவாக இருந்த சுவாதி திருநாள் அழைப்பில் அவருடைய தர்பாரில் முக்கிய கலைஞர்களாக சேர்க்கப்பட்டார்கள்

இவர்கள் நால்வர் வந்த பிறகு திருவனந்தபுர சமஸ்தானத்தில் நாட்டிய கலையும், இசைக்கலையும் விருத்தி அடைந்தன என்று சொல்லுவது மிகையாகாது.

சுவாதி திருநாள் மகாராஜா ஏதோ ஒரு சில பாடல்களை இயற்றி இருக்கலாம் என்று சொல்லலாமே தவிர. சங்கீத மும்மூர்த்திகள் என்று போற்றப்படும தியாகராஜர் முத்துசாமி திட்சதர், சியாமா சாஸ்திரி ஆகியோருக்கு இணையாக கூற முடியாது

சென்னை ''மியூசிக் அகாடமி' யில் சங்கீத மும்மூர்த்திகள் படங்களோடு சுவாதி திருநாள் படத்தையும் சேர்த்து வைத்தது மாபெரும் தவறு.

இவ்வாறு S பாலசந்தர் கூறினார்.

## நாதசுரம் நாமகிரிபேட்டை கிருஷ்ணன் சென்னை திரும்பினார்

தமிழக அரசு ''அரசவை நாதசுர கலைஞர்" நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன். 2 மாத கால வெளிநாட்டு சுற்றுப்பயணம் முடிந்து சென்னை திரும்பினார்.

அமெரிக்காவை அடுத்த கனடா நாட்டில் உள்ள பாரதி கலைமன்றம் நாமகிரிப்பேட்டை கிருஷ்ணனுக்கு அழைப்பு அனுப்பியது. அதன்பேரில், கலைஞர்கள் பரிமாற்ற திட்டத்தின்படி, அவரை மத்திய அரசு அனுப்பி வைத்தது கனடாவிலும். அமெரிக்காவிலும் அவர் 6 வார கால சுற்றுப் பயணம் செய்தார்.

பிறகு பிரான்சு தலைநகரான பாரிஸ் நகரில் 2கச்சேரிகள் நடத்தினார். பாரீஸ் ரேடியோவிலும் அவர் நிகழ்ச்சி இடம் பெற்றது.

அவர் லண்டன் நகரில் கச்சேரிகள் நடத்தினார். லண்டன் ரேடியோவிலும் (பி.பி.சி) அவர் கச்சேரி இடம் பெற்றது.

சுற்றுப் பயணத்தில் கலந்து கொண்ட நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன், மருமகனும் சென்னை ரேடியோ நிலைய துணை இயக்குனருமான ஏ. நடராஜனும் அவருடன் திரும்பினார்.

## திரைப் பாடகர் S. C. கிருஷ்ணன் மறைவு

கடந்த 20 ஆண்டுகளாக திரைபடங்களில் பாடி வந்தவர் S. C. கிருஷ்ணன். 'குலேபகாவலி' என்ற படத்தில் இவர் பாடிய 'நாயகமே நபி நாயகமே' என்ற பாடல் இவருக்கு பெரும் புகழ் தேடித்தந்தது. ஏராள தமிழ்ப் படங்களில் குறிப்பாக சிரிப்பு நடிகர்களுக்கு பாடிவந்தார். சிரிப்பு நடிகர் K. A. தங்கவேலுவுக்கும் நிறைய பாடி குரல் கொடுத்துள்ளார். தமிழக அரசியல் தலைவர்கள் பற்றி தனிப் பாடல்களும் பாடியுள்ளார்.

இவர் சில மாதங்களாக பக்கவாத நோயினால் பாதிக்கப்பட்டு மதுரையில் சிகிச்சை பெற்றுவந்தார். கடந்த 24-6-83 அன்று மதுரையில் தனது 54 வயதில் காலமானார். இவரது மனைவியார் புஷ்ப அம்மையாருக்கு திருமணமான 2 மகள்களும், மகன் துரையும் உள்ளனர்.

## தென்மண்டல வானொலி அரங்கிசை

### கழுகுமலையாரின் கம்பீர கானம்!



கடந்த 24.6.83 இரவு 10 மணிக்கு வானொலியில் தென் மண்டலகர்நாடக இசையரங்கில் பாடிய கழுகுமலை திரு A. கந்தசாமி தனக்கு கிடைத்த வாய்ப்பினை நன்றாக பயன் படுத்திக் கொண்டு கம்பீரமாக — கச்சிதமாக அழகாகப்பாடி. ரசிகர்களை திருப்திசெய்தார். வழக்கப்போல் அவரது நயமான குரலும், அழுத்தமான லயமும் அவருக்கு மேலும் ஒளிமயமான எதிர்காலம் உண்டு என்பதனை உறுதிப்படுத்தின.

அண்ணாமலை ரெட்டியார் காவடிச்சிந்து பாடல்பெற்ற நலமான கழுகுமலையில் ஆறுமுகம் பிள்ளை பொன்னம்மாள் இவர்களுக்கு மகனாகப் பிறந்த கந்தசாமி முதலில் எட்டையாபுரம் நாதசுரக் கலைஞர்பால சுப்ரமணியம்பிள்ளை மதுரை டாக்டர் சீத்தாராம அய்யர் இவர்களிடம் இசை பயின்று, பின் மதுரை S. சோமசுந்தரம் அவர்களிடம் 12 ஆண்டுகள் குரு குலவாசம் செய்தவர். இவரது முதல் நிகழ்ச்சி 1967-ல் பழனி முருகன் கோவிலில் நடைபெற்றது. தமிழகம், ஆந்திரம், கேரளம் பல இடங்களிலும் பாடி வருகின்றார். பொள்ளாச்சி விநாயகர் கலை மன்றம் இருவக்கு 'காரைஞ்சிதம்' எனவும், திருவாரூர் இலக்கிய மன்றம் 'கானகலாநிதி' எனவும், வாரியார் சுவாமிகள் தலைமையில் சங்கரன்கோவில் இந்து சமய தமிழ்ப்பேரவை 'இசைச்செம்மல்' எனவும் பட்டங்கள் வழங்கியுள்ளன. வாழ்க அவர் இசைத்தொண்டு!

## சீர்காழியார் உடல் நலம் வீடு திரும்பினார் !



சென்றமாதம் கடையநல்லூர் கச்சேரிக்கு சென்றுதிரும்பும் வழியில்சீர்காழி S கோவிந்தராஜன் குழுவினர் கார் விபத்துக்குள்ளானது. அவரும் அவரது குழுவினரும் விபத்தில் காயமடைந்து சிகிச்சை பெற்று வந்தனர். அவரது குழுவினர் ஏற்கெனவே நலமடைந்து வீடு திரும்பினர். கடந்த 1 மாத காலமாகசென்னை இசபெல்லா மருத்துமனையில் சிகிச்சை பெற்ற சீர்காழியார் உடல் நலமடைந்து வீடு திரும்பினார். எனினும் 1 மாத பூரண ஓய்வு எடுக்க வேண்டும். என மருத்துவர்கள் அறிவுரை வழங்கியுள்ளதால் ஆகஸ்டு மாதம் முதல் இசை நிகழ்ச்சிகளில் அவர் கலந்து கொள்வார். அவர்கலந்து கொள்ள வேண்டிய சில இசை நிகழ்ச்சிகளில் அவரது மகனார் சீர்காழி G. சிவசிதம்பரம் சென்று பாடி நிறைவு செய்கின்றார்.

## மாணவர்களுக்கு தமிழிசைச் சங்க கல்லூரி வகுப்புகள்

சென்னை இராசா அண்ணாமலை மன்றத்தில் இயங்கி வரும் தமிழிசைச் சங்க இசை வகுப்புகள் இவ்வாண்டு ஜூலைமுதல் துவங்க இருக்கின்றது. இங்கு திருமுறை இசை உட்பட வாய்ப்பாட்டு, மற்றும் வயலின், மிருதங்கம், வீணை, முதலிய இசைக் கருவிகளும் வாசிக்க பயிற்சி யளிக்கப் படுகின்றது. திருமுறை இசைக்கென்றே 2 தனி ஆசிரியர்கள் உள்ளனர். வாய்ப்பாட்டு வகுப்புகள் வாரத்தில் 6 நாட்களும், இசைக்கருவிகள் வகுப்புகள் வாரத்தில் 3 நாட்களும் மாலை வேலைகளில் நடத்தப்படுகின்றது.

இதில் 25வயதுக்குட்பட்ட ஆண் பெண், இருபாலரும் சேரலாம்.

வாய்ப்பாட்டு கற்க வருபவர்களுக்கு இசை ஆர்வம்இருந்தால் போதும். கருவிகள் கற்க வருபவர்களுக்கு இசையில் அடிப்படை பாடங்கள்(சரளி வரிசை)தெரிந்திருக்கவேண்டும்.

இதன் கிளை வகுப்புகள் காலை வேலைகளில் சென்னை மந்தவெளி சிருங்கேரி மடத்தில் நடைபெறுகின்றன. விண்ணப்பபாரம் கல்லூரியில் கிடைக்கும்.

தொடர்பாளர் : T. சங்கரன்

TN/MS(S) 260
'IYALLISAI' Musical Bi-Monthly Printed by T. Thirunavukarasu at Jayalakshmi Art Printers, Kavarai Street, Vadapalani, Madras 600 026, Published & Edited by M. Lakshmi, 57, South Sivan Koil Street, KODAMBAKKAM, MADRAS - 600 024.

ந. இராமநாதன்,
18, 4வது பிரதான சாலை
இராசா அண்ணாமலைபுரம்
சென்னை - 28

## விராலிமலை அருணகிரிநாதர் விழா

புதுக்கோட்டை மாவட்டம் விராலிமலை அருள்மிகு சுப்ரமணிய சுவாமி திருக்கோவில் மலை மண்டபத்தில் ஸ்ரீ அருணகிரி நாதர் திருப்புகழ் அறப்பணி மன்றத்தினரால் ஸ்ரீ அருணகிரிநாதர் முப்பத்து மூன்றும் ஆண்டுவிழா ஜூலை 22, 23, 24 தேதிகளில் சிறப்பாக நடைபெற உள்ளது. மூன்று நாள் விழாவிலும், விடையாற்றி அருணகிரிநாதர் கிரிவலத்திலும் நாதசுரக் கலைஞர்கள் காருகுடி S. கைலாசம், வாராப்பூர் M. கணேசன், ஆலங்குடி A. N. அய்யாமணி, திருசங்கோய்மலை A. இராசரத்தினம் குழுவினர்கள் நாதசுரம் வாசிக்கின்றனர். இதர சிறப்பு இசை நிகழ்ச்சிகள்.

22—7—83

மாலை 7-30 மாஸ்டர் ப. சீனுவாஸ்—மாண்டலின் இசை (11-வயது)
சிக்கல் பாஸ்கரன்—வயலின்
வலங்கைமான் மான் A. சண்முக சுந்தரம்—தவில்
தஞ்சாவூர் உபேந்திரன் - மிருதங்கம்
T. H. விநாயகராம் கடம்

இரவு 10-[illegible] M. R. விஜயா—குழுவினர் இன்னிசை

23—7—83

மாலை 4 [illegible]மங்கலம் A. V. சண்முகவடிவேல், குழுவினர் நாதசுரம்

6-30 [illegible]மடை மு. ராஜா குழுவினர் நாதசுரம்
விளையபட்டி A. R. சுப்ரமணியம்—தனித்தவில்
விழுப்புரம் A. V. முருகையன்—தனித்தவில்

9-30 மதுரை S. சோமசுந்தரம் குழுவினர்—இன்னிசை

24—7—83

மாலை 7 ஷேக் [illegible] சுபானி—திருமதி காலிஷாபி மெகபூப் குழுவினர்—நாதசுரம்
திருப்புங்கூர் [illegible] முத்துக்குமாரசாமி—தனித்தவில்

இரவு 10 மலேசியா வாசுதேவன், தீபன் சக்ரவர்த்தி குழுவினர் மெல்லிசை நிகழ்ச்சி

## உடுமலை தமிழிசைச் சங்க மூன்றும் ஆண்டு விழா

காலஞ்சென்ற சுந்தர ஓதுவா மூர்த்திகள் பெயரில் ஓர் தமிழிசைச் சங்கத்தினை உடுமலைப்பேட்டையில் நடத்தி வருகின்றார் அவரது மகனார் கி. சு. செந்தில் ஆறுமுகம் எம்.ஏ.பி.டி. அவர் இதன் மூன்றும் ஆண்டு விழா கடந்த ஜூன் 20, 23, 26 தேதிகளில் உடுமலைப்பேட்டையில் சிறப்பாக நடத்தினார்.

அமைச்சர் இராம. வீரப்பன் விழாவினை துவக்க, மயிலை குருஜி சுந்தரராம், நா. ரா. முருகவேள், அ சேனாபதிக் கவுண்டர் M. P. தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார், திருக்குறளார் V. முனுசாமி, D. V. நாராயணசாமி, சரவணப்பட்டி தவத்திரு கந்தா சுவாமிகள், நீதிபதிகள் P. R. கோகுலகிருஷ்ணன், R. செங்கோட்டுவேலன் மற்றும் பல சான்றோர்கள் கலந்து தமிழிசை பற்றி உரையாற்றினர். கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்களும் சிறப்புரையாற்றினர்.

தினசரி நடைபெற்ற கலை நிகழ்ச்சிகளில் திருத்தணிகை சுவாமிநாதன் தேவாரம், திருமுருக கிருபானந்தவாரியார் இசைச் சொற்பொழிவு, மதுரை S. சோமசுந்தரம், திருப்பூர் சகோதரிகள் ஆகியோர் இசை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

இந்த தமிழிசைச் சங்கம் விரைவில் தமிழிசைக் கல்லூரியும் துவங்க உள்ளது. அதன் கட்டிட அடிக்கல்லை சென்ற ஆண்டு ராஜா சர் முத்தையா செட்டியார் உடுமலையில் நாட்டினார்.

## வடபழநி வேங்கீஸ்வரர் திருக்கோயில் குடமுழுக்கு இசை நிகழ்ச்சிகள்

சென்னை வடபழநியில் உள்ள அருள்மிகு சாந்த நாயகி சமேத வேங்கீஸ்வரர் திருக்கோவில் ராச கோபுரம் கட்டப்பெற்று அதன் குடமுழுக்கு பெருவிழா 15-7-83 வெள்ளிக்கிழமை காலை 5 மணிக்கு மேலவைத் தலைவர் டாக்டர் மா. பொ. சிவஞானம், அமைச்சர்கள் இராம வீரப்பன், டாக்டர் H. V. ஹண்டே முன்னிலையில் நடைபெற்றது.

ஜூலை 11 சூலமங்கலம் சகோதரிகள் குழுவினர்.

ஜூலை 12 திரு T. L. மகாராசன் குழுவினர்.

ஜூலை 13 பத்மஸ்ரீ மதுரை சோமு குழுவினர்.

ஜூலை 14 K. வீரமணி சோமு & ராதா குழுவினர்,

## டாக்டர் M. பால முரளி கிருஷ்ணா பிறந்த நாள் விழா

கடந்த 6-7-83 அன்று சென்னை மேற்கு மாம்பலம் அயோத்தியா மண்டபத்தில் பிரபல பாடகர் டாக்டர் M. பாலமுரளி கிருஷ்ணாவின் பிறந்தநாள் விழாவினை தமிழக அமைச்சர் திருமதி கோமதி சீனிவாசன் தலைமையில் முரளிரரவளி ஆர்ட் சென்டர் என்ற சங்கம் கொண்டாடியது. விழாவில் சிக்கல் புல்லாங்குழல் கலை சகோதரிகள் திருமதி குஞ்சுமணி நீலாவிற்கு நாதசுதார்ணவ என்ற பட்டம் அளிக்கப்பட்டது. உதயசங்கர் ஜோசி இசைக் கச்சேரிக்கு சிக்கல் பாஸ்கரன் வயலின், தஞ்சாவூர் குமார் மிருதங்கம் வாசித்தனர். திருமதி E. காயத்ரி வீணை கச்சேரியும் நடைபெற்றது. டாக்டர் பால முரளி கிருஷ்ணாவும் வந்திருந்து விழாவினைச் சிறப்பித்தார்.

## கடிதங்கள்

தங்கள் 1.6-83 தேதி வெளியிட்ட இயலிசை இதழில் மதுரை தமிழ்நாடு அரசு இசைக் கல்லூரி மற்றும் மற்ற இசைக்கல்லூரிகளில் மாணவர்கள் சேர்ந்து இசை பயில்வதற்கான விளம்பரம் செய்திருந்தீர்கள். இக்குறிப்புகளைப் பார்த்து கல்லூரிகளில் மாணவர்கள் சேர்க்கை அதிகப்படுத்தவும், இசைத் துறையின் முன்னேற்றத்திற்காகவும் தாங்கள் செய்த இச்செயலினை நான் வரவேற்று, இதன் வாயிலாக தங்களுக்கு நன்றி சொல்லவும் கடமைப்பட்டுள்ளேன்.

திருப்பாம்புரம் சோ. சண்முக சுந்தரம் முதல்வர், தமிழ்நாடு அரசு இசைக் கல்லூரி
மதுரை-1

தங்கள் இயலிசை இதழ் தவறாமல் கிடைக்கப்பெற்று சங்கீத உலக செய்திகள் அறிந்து மகிழ்கின்றேன். கோவில் கும்பாபிஷேக செய்திகளும், உற்சவ நிகழ்ச்சிகளும் தெரிவிப்பதற்கு நன்றி.

—T. K. சுப்பராமன், பிடில்
மதுரை.

வெளிநாட்டில் உள்ள எங்களுக்கு தமிழிசை பற்றியும், தமிழ்க் கலைஞர்கள் பற்றியும் பற்றியும் தெரிந்துகொள்ள 'இயலிசை' பயன்படுகின்றது.

N. சுந்தரமூர்த்தி
கட்டபிராய், யாழ்ப்பாணம்
இலங்கை.

## அன்பார்ந்த ரசிகர்களே! கலைஞர்களே!

பத்திரிகை நடத்துவதில் உள்ள வழக்கமான சிரமங்களால் இவ்விதழும் தள்ளி வந்துள்ளது. என்ன இடையூறுகள் வந்தாலும் 'இயலிசை' தொடர்ந்து ஒலிக்கும். தனது தொண்டினைச் செய்யும்.

இயலிசை இதழுக்கு உங்கள் ஆதரவு மிகவும் தேவைப்படுகின்றது. இன்னும் பலர் சந்தா கட்ட வேண்டும். சந்தா கட்டியவர்கள் இயலிசை வளர்ச்சி நிதிக்கு இயன்றதை அனுப்பலாம்.

விரைவில் இயலிசைக்கு சொந்த எழுத்து கோர்ப்பு பகுதி (Composing Section) வாங்க உள்ளோம். இதற்காக இயலிசை ஆசிரியர்கள் உங்கள் வீடு தேடி வர உள்ளனர். இவ்விதழ் வளர்ச்சிக்கு இன்னும் இயலிசை எவ்வாறெல்லாம் இசை உலகுக்கு தொண்டாற்ற வேண்டும் எனவும் தெரிவியுங்கள்.

—சிறப்பாசிரியர்.

சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்